ஸ்ரீலஸ்ரீ வேதாந்த ஞானதேசிகர்

அத்வைதானந்த சுவாமி அவர்கள்

அருளிய






# பிரஹ்ம ஞான உபதேசம்.

கும்பாபிஷேக மலர்.

நாள்: 27--1--75.

உ
சிவமயம்.

ஸ்ரீலஸ்ரீ வேதாந்த ஞானதேசிக
அத்வைதானந்த சுவாமி அவர்கள்
அருளிய



# பிரஹ்ம ஞான உபதேசம்.

கும்பாபிஷேக மலர்

நாள்: 27--1--75.

முதற் பதிப்பு—1975.

| விலை ரூபாய் ஒன்று |
| --- |

பிரசுர உரிமை:
**ஸ்ரீ ஆத்மானந்த சுவாமிகள்**
ஸ்ரீலஸ்ரீ அத்வைதானந்த சுவாமி மடாலயம்
**பு தூ ர்**
**விளாத்திகுளம் தாலுகா**
**திருநெல்வேலி ஜில்லா**

அச்சிட்டோர்: சுந்தர் அச்சகம், அருப்புக்கோட்டை.

உ
சிவமயம்.

# முகவுரை.

வெண்பா.

**அத்வை தானந்த ரெனும் ஆசிரியர் மாணவனும்**
**சித்தம் தெளிந்த சிதம்பரற்கு — கத்யத்தில்**
**ஆன்ம விசாரமதை அன்புறவே தாம் வரைந்து**
**ஜென்ம மதை நீக்கினர் சீர்.**

முந்நீரை வரம்பாகக் கொண்ட இம்மலர் தலை வுலகில் மாந்தர்களால் அடையத் தக்கது புருடார்த் தமாம். அவை அறம், பொருள், இன்பம், வீடு யென நான்காம். இவைகளில் வீடு முக்கிய புருடார்த்தமாம் அவை பிரஹ்மான்ம விசாரத்தால் உண்டாகிய தத்துவ ஞானத்தைக் கொண்டு நான்கு சாதனங்களை யுடைய அதிகாரி சர்வ துக்க நிவர்த்தி பரமானந்தப்ராப்தி யாகிய மோக்ஷமெனும் வீட்டை யடையத் தக்கதாம்.

இத்தகைய ஞானத்தை அடைந்து திருவளர் பாண்டிய நாட்டில் மகாநுபவராய் விளங்கி தன்னை வந்து அடைந்த அதிகாரிகளுக்கு ஆச்சாரிய முகூர்த் தமாக யெழுந்தருளியிருந்து, திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள விளாத்திகுளம் தாலுகாவைச் சேர்ந்த **புதூரில் கோவில் கொண்டருளும் ஸ்ரீலஸ்ரீ அத்வைதானந்த ஞானுச்சாரிய சுவாமிகள்** தனது மாணவர்களுள் சிறந்து விளங்கியவரும், நான்கு சாதனங்கள் உடையவரும், குருபக்தி உடையவரும், ஓய்வு பெற்ற பெரியாறு இஞ்ஜினியர் ஆன

திருச்சி, ராவ்சாகிப் ஸ்ரீமத் **A.** சிதம்பரம் பிள்ளை அவர்களுக்கு உபதேசபூர்வமாக எழுதி யனுப்பிய ஒன்பது கடிதங்களுள் ஒன்பது பிரகாரமாக வேதாந்த விசாரம் அடங்கப் பெற்றிருக்கின்றன.

இக்காலத்தில் ஜனன மரண சாகரத்தில் மூழ்கித் தவித்துவருகிற பந்த அதிகாரிகளும் சம்சார சாகரத்தைத் தாண்டி மோக்ஷமென்ற கரையை அடைய **'பிரஹ்ம ஞான உபதேசம்'** எனும் இந்நூல் ஒரு தெப்பமாயிருக்கிறது. ஜன்ம சாபல்யத்தை அடைய இச்சையுள்ள புண்ணிய புருஷர்கள் இந்த **'பிரஹ்ம ஞான உபதேசம்'** எனும் இந்நூலை வாசித்தும் மனனம் செய்தும் விவேகத்தை சம்பாதித்து மோக்ஷ வீடென்னும் புருஷார்த்தத்தை அடைவார்கள்.

இந்நூலை முமுக்ஷுக்கள் அனைவரும் விசாரம் செய்து பேரானந்தப் பெருவாழ்வு பெற்றுய்யுமாறு ஸ்ரீமத் குருவருளை பிரார்த்திக்கின்றனன்.

இங்ஙனம்,

**ஸ்ரீ ஆத்மானந்த சுவாமிகள்**

# சிறப்புரை.

இந்நூலுக்கு ஆசிரியராகிய சற்குரு ஸ்ரீலஸ்ரீ அத்வைதானந்த சுவாமிகளை 1921-ம் வருஷம் ஸ்ரீவில்லி புத்தூரில் சந்தித்து உபதேசம் பெறும் பாக்கியம் அடியேனுக்குக் கிடைத்தது. அதன்பின்னர் உத்தியோக நிமித்தம் பல ஊர்களுக்கு போக வேண்டியிருந்ததால் அவர்கள் அடியேனுக்கு அஞ்சல்மூலம் எழுதியனுப்பிய உபதேசங்களை தொகுத்துள்ள ஒன்பது கடிதங்கள் இந்நூலில் அடங்கியிருக்கின்றன. இறுதியில் வேதாந்த நூல்களில் உள்ளபடி சிருஷ்டிக் கிரமம் சுருக்கமாக எழுதப்பட்டிருக்கிறது

ராவ்சாகிப் அ. சிதம்பரம் பிள்ளை

உறையூர், ஓய்வுபெற்ற மாவட்ட எஞ்ஜினியர்.

திருச்சிராப்பள்ளி.



# ஸ்ரீ குரு தோத்திரம்

எப்பொருட்க்கும் முதற்பொருளாம் இபமுகனை தாரகத்தாய்
எழில் வீர்கொண்ட
அப்பொருளாம் அறுமுகனை அன்னையென உலகீன்ற கன்னியான
மெய்ப்பொருளாம் பரசிவையை விண்ணவர் தான் சங்கரனை
விமல ஞானம்
கைப்பொருளாய் காட்டுமெங்கள் அத்வைதானந்தர் பதம்
கருத்துள்வைப்பாம்.

—ஸ்ரீ ஆத்மானந்த சுவாமிகள்

## பொருளடக்கம்.

| பொருள். | பக்கம் |
| --- | --- |
| 1. முதற் கடிதம் — பிரஹ்ம ஞானத்துக்கு அதிகாரியும், சாதனங்களும் .... ... | 1 |
| 2. இரண்டாங் கடிதம் — கைவல்ய நவநீதம் ''வாராயென் மகனே'' -செய்யுளின் விரிவுரை | 3 |
| 3. மூன்ருங் கடிதம் — கைவல்ய நவநீதம் ''தன்னையுந் தனக்காதாரத் தலைவனையும்'' -செய்யுளின் விரிவுரை | 5 |
| 4. நான்காங் கடிதம் — நான் யாரென்னும் ஆன்ம விசாரம் ... .... | 9 |
| 5. ஐந்தாம் கடிதம் — ஆன்மானுசந்தானத்துக்கு உரித்தான விசாரம் .... ... .... | 13 |
| 6. ஆரும் கடிதம்—மாயையும் அதன் நிவிர்த்தியும் | 18 |
| 7. ஏழாம் கடிதம் — தத்துவமஸி என்னும் உபதேச மகா வாக்கியத்தின் அர்த்தம் ... | 19 |
| 8. எட்டாம் கடிதம் — நான் சச்சிதானந்தம் என்பதை சுருதி, யுக்தி, அனுபவ விளக்கம் | 21 |
| 9. ஒன்பதாம் கடிதம் — சீவன் முக்தனின் உலக விவகாரங்கள் .... ... ... | 23 |
| 10. சிருஷ்டிக் கிரமம் .... ... ... | 27 |
| 11. தியானம் ... .... ... ... | 30 |

## உபதேசம் அடங்கிய ஒவ்வொரு கடிதத்திலும் சுவாமிகள் வழக்கமாக எழுதும் முன்னுரை.

---

உ

சிவமயம்.

ஓம் தத்ஸத் ப்ரஹ்மணே நம:

ஸ்ரீமத் அனாதி அகண்ட பரிபூரண சச்சிதானந்த அத்வைத நித்திய சுத்தப் பிரஹ்மான்மயிக்கிய சொரூபத்தைப் பிரபல சுருதி குரு சுபானுபவத்தால் தானே தானாகத் தெளிந்து நனவிற் சுழுத்தி நிலையை அடைந்தாறிய சுத்த சத்துவ குண அருவ மன உபாதி உடைய சீவன் முக்தர்களது சுபானுபவமும் மெய்யன்பும் பக்தியும் நிறைந்துள்ள சிதம்பரம் பிள்ளை அவர்களுக்கு

சாக்ஷாத் சற்குருநாதரது கிருபையினாலே இஷ்ட சித்தியும் சீவன் முக்தியும் மேன்மேலும் உண்டாவதாகுக.

இவ்விடம் சாதுக்கள் யாவரும் க்ஷேமம். இதுபோல் அவ்விடம் தங்களுடையவும் மற்றும் அன்பர்களுடையவும் யோக க்ஷேமங்களை அறிய மிக விருப்பம்.

## முதற் கடிதம்.

### பிரஹ்ம ஞானத்துக்கு அதிகாரியும் சாதனங்களும்

பிரஹ்ம ஞானம் அடையும் அதிகாரி லக்ஷணத்தை பகவான் கீதையில் சொல்லியிருக்கிருர். அதாவது

**ஓதற்பாலார் பாலும் இவ்வுண்மைப் பொருட்பாலும்**
**காதற்பாலோர் ஐம்புலன் வென்ருேர் இவர் கண்டாய்**

இதன் பொருள்:—

குருவினிடத்திலும் குரு உபதேசித்த பிரத்தியகபின்ன பிரஹ்ம தத்துவத்திலும் சிரத்தை பக்தி உடையவனும் சப்தாதி பஞ்ச விஷயங்களைச் செயித்தவனும் சில தினங்களில் ஞானமடையும் அதிகாரி.

குரு கீதையில், எவனுக்கு தெய்வத்தினிடத்து மேலான பக்தி இருக்கிறதோ அதுபோல குருவினிடத்தும் பக்தி இருக்கிறதோ அம்மகாத்மாவிற்கே சொல்லிய அருத்தங்கள் பிரகாசிக்கும் என்று சொல்லியிருக்கிறது இது குரு பக்திக்குப் பிரமாணம்.

பஞ்ச விடயங்களை செயித்தவனுக்கு ஞானம் உண்டாகும் என்பதற்குப் பிரமாணம்

**தொக்கபொறி விடயநலஞ் சுவையறநின் மனமாறத்**
**தோன்றில்வீரா**
**தக்கவுணர் வுணர்ந்தவனுய் பவக்கடல்கள் கடந்தன்றே**
**சனனந் தீர்ந்தாய்**

என்று வாசிட்டத்தில் சொல்லியிருப்பது. இனி சாதனங்களைப் பற்றி எழுதுவாம்.

தேகத்தை நானென்று அபிமானம் செய்யும் அகங்கார வடிவ கர்த்தா சாக்கிர சொப்பனங்களில் பாவ வடிவமாய் இருந்துகொண்டு சகலமான வியவகாரங்களைச் செய்கிருன். சுழுத்தி அவத்தையில் அஞ்ஞானத்தில் லயமாய் அபாவமாய் ஒரு வியவகாரமும் செய்கிறதில்லை. ஆனல் இதன் பாவா பாவங்களையும் வியவகாரம் வியவகாரமின்மையையும் நான்

நானென்னும் சொரூபமாயிருந்து அறிந்துகொண்டிருக்கிறேன். ஆதலால் இந்த அகங்கார சொரூபமாகிய சீவனது மித்தையா வடிவம் நான் அன்று. இது ஒரு அவத்தையில் இருந்து மற்றொரு அவத்தையில் இல்லாததால் மித்தை. நான் எல்லா அவத்தைகளிலும் இருந்து விளங்குகிறபடியால் நான் சத்தியம், ஞானம், ஆனந்தம். ஆதலால் சச்சிதானந்த வடிவ நானே பிரஹ்மமென்று சதா பாவிக்க வேண்டியது. இந்த அர்த்தத்தையே பகவான் கீதையில்

**மேலாயுள்ள விப்பொருளை மெய்யா யறிந்து பொய்மாய**
**மாலாய் மயங்கு மனத்தினையு மடக்கியந்த மனங்கலங்குங்**
**காலாயுள்ள காமத்தைக் கரப்பாயென்று கட்டுரைத்தான்**
**சேலாயுலகமுறு புனலோர் செலுவின் புரையே செலுத்தி**
**னேன்**

என்று சொல்லியிருக்கிறார்.

ஆதலால் இப்படிப்பட்ட அனுசந்தானத்தால் தத்துவ ஞானம், வாசனாக்ஷயம், மனோநாசம், இந்திரிய நிக்கிரகம் உண்டாகும். இது பொது சாதனம்.

இனி தனித்தனி சாதனம்:—

ஞானத்துக்கு சிரவணம், மனனம், நிதித்தியாசனம்

வாசனாக்ஷயத்திற்கு விவேகம், இந்திரிய நிக்கிரகம், மைத்திரி, கருணை, முதிதை, உபேக்ஷை ஆகிய குணங்கள் சின்மாத்திர வாசனை.

மனோநாசத்துக்கு வைராக்கியம், தாரணை, தியானம், சமாதி இவைகளின் பலமாகிய நிர்விகற்பசமாதி.

இந்த சாதனங்களை முக்கியா முக்கியமாய் சதா அனுஷ்டிக்க வேண்டும். சிட்டுக்குருவி போல் விடாமுயற்சி செய்தால் ஈசுவரானுக்கிரகத்தால் ஜீவன் முக்தி கிடைக்கும்.

---

# இரண்டாங் கடிதம்.

## கைவல்ய நவநீத நூலில் உள்ள "வாராயென் மகனே" - செய்யுளின் விரிவுரை.

**வாராயென் மகனே தன்னைமறந்தவன் பிறந்திறந்து**
**தீராதசுழற் காற்றுற்ற செத்தைபோல சுற்றிசுற்றி**
**பேராத காலநேமிப் பிரமையிற் றிரிவன்போதம்**
**ஆராயுந் தன்னைத்தா னென்றறியு மவ்வளவுந்தானே**

என்னும் செய்யுளின் உரை எழுதுவாம்.

உலகத்தில் சீவனெனவன் சரீரத்தை யானென்றபிமானத் தலாகிய பிராந்தியால் சரீரத்தைப் பெற்ற மாதா பிதாக் களுக்கு மகன். அத்தன்மையால் அவர்கள் அவனை மகன் என்றழைப்பார்கள். இவன் நிஷ்காமகர்ம உபாசனையால் சித்த சுத்தியும், ஏகாக்கிரக தன்மையும் அடைந்து ஈசுவர கிருபையால் சரீரம் முதலாக சொல்லப்பட்ட அனாத்மா வானது அழியும் இயல்புடையது. ஆதலால் அநித்தியமும் விகாரியுமாம் எனது வாஸ்தவ சொரூபம் அன்று என நிச்சயிக்கிறபடியால் இந்த அவாஸ்தவ சொரூபமாகிய சரீரத்தைப் பெற்ற மாதா பிதாக்களுக்கு இவன் மகன் அல்லன் என்பதாயிற்று. சரீரியாகிய ஆத்மா எப்போதும் இருக்கிறபடியால் நித்தியமும் நிர்விகாரியும்; ஆம். இது எனது வாஸ்தவ சொரூபமென்று நிச்சயிக்கிறபடியால் இவ் வாத்ம ஞானத்தை அனுக்கிரகஞ் செய்யும் குருவுக்கு இவன் மகன் என்பதாயிற்று. இந்த நிச்சயத்தால் இவன் ஆத்ம ஞானம் அடைகிறதற்கு அதிகாரியானபடியால் "வாரா யென் மகனே" என்றழைத்தார்.

இதற்குப் பிரமாணம்:— பிரஹ்ம கீதை

**இந்த விடும்பை யுடம்புறு மேது**
**தந்தை யெனப் புகழ்கின்றி லர்தக்கோ**
**ரந்த மிலாத வகண்ட ம நம்முட்**
**டந்தவர் தந்தை யெனச் சமைவுற்றுர்**

பத்தாமவன் ஒன்பது பேரைப் பார்த்துக்கொண்டிருந்தும் மயக்கத்தால் தன்னை பத்தாமவன் என்று அறிகிறதில்லை.

அதுபோல சரீரத்திரயம், அவஸ்தாத்திரயம், அபிமானத் திரயம் ஆகிய ஒன்பதையும் தான் நித்திய அபரோக்ஷ பிரஹ்மமாயிருந்து அறிந்துகொண்டிருந்தும் மயக்கத்தால் தன்னைத் தான் நித்திய அபரோக்ஷ சுயம்பிரகாச பிரஹ்மம் என்று அறியாததே அஞ்ஞானம். இந்த அஞ்ஞானத்தை உடையவனை "**தன்னை மறந்தவன்**" என்றார்.

தூங்கும் புருஷன் நித்திரா மயக்கத்தால் தன்னை மறந்து அம்மயக்கத்தால் தோன்றும் சரீரம் மனைவி புத்திர தனாதிகளை யான் எனதென் றபிமானத்து அதனது பிறப்பிறப்பு லாப நஷ்ட சுகதுக்காதிகளைத் தனதாகப் பாவித்து பிரமை யடைவதுபோல இந்த சீவனும் அஞ்ஞான சக்தியால் தோன்றும் சரீர கன்மாதிகளை யான் எனதென்று அபிமானித்து அதனது பிறப்பிறப்பு கன்மங்களை தனதாகப் பாவித்து நான் பிறந்தேன் கர்மங்களைச்செய்தேன் இறந்தேன் பின்னும் கர்மங்களுக்கு ஈடாகப் பிறந்தேன் என்றிப்படி அனந்தவிதமாக சம்சார சக்கரமாகிய பிராந்தியை அடைந் தான். இக்கருத்து பற்றி "பிறந்திறந்து தீராத சுழற் காற்றுற்ற செத்தைபோல் சுற்றிசுற்றி பேராத காலநேமிப் பிரமையில் திரிவன்" என்றார்.

நிஷ்காம புண்ணிய பரிபாகத்தால் விவேகம், வைராக் கியம், மானமில்லாமை, டம்பமில்லாமை, பிராணிகளை இமிசை செய்யாமை, சாந்தி மனோவாக்கு காயங்கள் ஒத்து இருத்தல், குருசேவை, மண்சலங்களால் சரீரசுத்தி, மைத்திரி கருணை முதிதை உபேக்ஷையால் மனோசுத்தி, தேக சுவாதீன மின்மை, கர்வமில்லாதிருத்தல், கடவுளிடத்து பிறழ்ச்சி யில்லாத பக்தி அதாவது ஆத்மாவிடத்து இடைவிடாத நிஷ்டை, சாது சங்கம், ஆத்ம ஞான சாத்திரங்களை இடை விடாமல் ஆராய்ச்சி செய்தல் முதலாய ஞான சாதனங் களோடு நான் யாரென்று விசாரித்து தன்னை சரீரத்திரயங் களுக்கு விலக்ஷணமாக நான் நித்திய அபரோக்ஷ சுயம் பிரகாச பிரஹ்மமாய் இருக்கிறேன் என்று அறிந்தால் நான் பிறந்தேன் இறந்தேன் என்னும் அத்தியாச பந்தம் நீங்கும். இப்படி அறியாவிட்டால் நீங்காது என்னும் கருத்து பற்றி "போதம் ஆராயுந் தன்னைத் தானென்றறியு மவ்வளவுந் தானே" என்றார்.

இந்தப் பாட்டில் ''போதம் ஆராயும்'' என்பதற்கு ஞான சாதனங்களோடு ஆராய்ச்சி செய்யவேண்டும் என்பது கருத்து.

குரு சிஷ்யனை ''வாராயென் மகனே'' என்று அழைத்த தினால் சிஷ்யனது மனத்தை விஷயங்களில் செல்லாமல் தன் வசமாக்கி தான் சொல்லும் உபதேசத்தை ஏகாக்கிரமாய் கேட்கும்படி அவனை தன் வசமாக்கிக்கொண்டார்.

ஞான சாதனங்கள் இன்றி இவ்வுலக இன்ப சாதனங் களோடு மேலெழுந்தவாரியாக விசாரித்தால் விபரீத ஞானம் உண்டாகும் என்பது நூலாசிரியர் கருத்து. இதற்குப் பிரமாணம்:— வாசிட்டம்

இயற்கை குணஞ் சோதித்து முன்னே பின்னே
யாவையுமாம் பிரம்மம் நீயென்னல் வேண்டும்
வியப்புறு மாசையி லுழல்வார்க்கிவ் வாருேதின்
மீளாத தீ நரகில் வீழ்த்ததாகும்
தியக்குறு போகத்தாசை தீர்ந்து புந்திதெளிந்த
நினைப் போல்வார்க்கே திகழத் தோன்றும்
மயக்கமற வுணர்த்தவல்ல குருவைக் கிட்டா
வருந்தி யுந்தன் பிறப்பறுக்கு மகனுமாங்கே

என்று சொல்லப்பட்டிருக்கிறது.

---

## மூன்றாங் கடிதம்.

### கைவல்ய நவநீத நூலில் உள்ள ''தன்னையுந் தனக்காதாரத் தலைவனையுங் கண்டானேல்'' என்னும் செய்யுளின் விரிவுரை.

தன்னையுந் தனக்காதாரத் தலைவனையுங் கண்டானேல்
பின்னையத் தலைவன்றானும் பிரம்மமாய்ப் பிறப்புத்தீர்வன்

என்னும் சுருதி வாக்கியத்தை விசாரிப்பாம்.

வினா:- தான் என்னும் பதத்திற்குப் பொருள் யாது?

விடை:- சுக துக்கங்களை அனுபவஞ் செய்யும் போக்தா.

**வினு:-** இந்தச் சரீரம் போக்தாவா அல்லது இதற்கு அன்னியமா?

**விடை:-** இந்தச் சரீரம் போக்தாவன்று. சடமாதலின் யாது சடமோ அது போக்தாவன்று, கடம் போல. அன்றியும் சாக்கிரத்தில் சுகம் உண்டாகும்போது முகத்தில் மலர்ச்சியும் துக்கம் உண்டாகும்போது முகத்தில் வாட்டம் உண்டாகிறது. ஆனுல் சொப்பனத்தில் இச்சரீரம் யாதொரு குறியுமின்றி பிணம்போற்கிடக்க புருஷன் சுகதுக்கங்களை அனுபவிக்கிருன் ஆதலால் சாக்கிரத்தில் இச்சரீரத்தில் இருந்துகொண்டு சுக துக்கமாய போகங்களை அனுபவிக்கும் போக்தாவாகிய புருஷன் இச்சரீரத்துக்கு அன்னியமென்றே நிச்சயிக்கப் பட்டது.

**வினு:-** அப்படியானுல் இந்திரியங்களை போக்தாவென்று சொல்லலாமே?

**விடை:-** சொப்பனத்தில் இந்திரியங்கள் இல்லாதிருக்க புருஷன் சுக துக்கமாய போகங்களை அனுபவிக்கிருன். ஆதலால் இந்திரியங்கள் போக்தாவன்று.

**வினு:-** அப்படியானுல் பிராணனை போக்தா வென்று சொல்லலாமே?

**விடை:-** மனிதன் தூங்கும்போது இந்த பிராணன் இருந்தாலும் சிநேகிதன் வந்தாலும் உபசாரஞ் செய்கிறதில்லை. திருடன் வந்தாலும் அவனை தண்டிக்கிறதுமில்லை. ஆதலால் இப்பிராணன் சடமாம், போக்தாவாகமாட்டாது.

**வினு:-** அப்படியானுல் மனதை போக்தா வென்று சொல்லலாமே?

**விடை:-** மனதானது சுழுத்தியில் இல்லாதிருக்க சேதனத்தின் பிரதிபிம்பத்தோடு கூடிய அவித்தையின் சத்துவ குணவிருத்திகளால் புருஷன் பிரஹ்ம சுகத்தை அனுபவிக்கிருன். ஆதலால் சுகதுக்கங்களை அனுபவஞ் செய்யும் போக்தா மனம் அன்று. மனதிற்கு வேருகவே யிருக்கிறது.

**வினு:-** அப்படியானுல் போக்தா வென்பது யாது?

விடை:- அவித்தையில் பிரதிபிம்பித்த ஆபாசனோடு கூடிய அதிஷ்டான சேதனமே போக்தாவென்று சொல்லப்படுகிறது

வினு:- கேவல சைதன்யத்தையே போக்தா வென்று சொல்லலாமே?

விடை:- சொல்லக்கூடாது. ஏனென்ருல் சைதன்யம் நிர் விகாரியானபடியால் சுகதுக்கமாய விகாரத்தோடு கூடிய போக்தாவாகச் சொல்லக்கூடாது.

வினு:- அப்படியானுல் ஆபாசனையே போக்தா வென்று சொல்லலாமே?

விடை:- அந்த ஆபாசன் நச்சு சர்ப்பம் போல சைதன்யத்தில் கற்பிதம் ஆதலின் அதிஷ்டானம் இன்றிய பிராந்திஒரிடத்தும் இல்லை யாதலால் கேவல ஆபாசன் போக்தா வன்று. மற்ருே அதிஷ்டானத்தோடு கூடிய ஆபாசனே போக்தா வென்று சொல்லப்படும்.

இந்தப் போக்தா சுழுத்தி அவத்தையில் சாக்கிர சொப்பன விஷய வாசனைகளோடு கூடிய அஞ்ஞானத்தினது விருத்தியாகிய உபாதிகளோடு கூடி சொரூப சுகத்தை அனுபவஞ் செய்வதால் பிராஞ்ஞன் என்று சொல்லப்படும். சொப்பனுவத்தையில் சரீர இந்திரியங்கள் இன்றி கேவலம் அந்தக்கரணத்தினது விருத்தியாகிய உபாதியோடு கூடி வாசனுமய சப்தாதி விஷயங்களை அனுபவஞ் செய்வதால் தைஜசன் என்று சொல்லப்படும். சாக்கிராவத்தையில் சரீரம் இந்திரியங்களோடு கூடி தூல சப்தாதி விஷயங்களை அனுபவஞ் செய்வதால் விசுவன் என்று சொல்லப்படும்.

இந்தப் பிரகாரம் தான் என்னும் பதத்தின் அருத்த மாகிய போக்தாவின் சொரூபம் நிச்சயிக்கப்பட்டது.

வினு:- தனக்காதாரத் தலைவன் என்னும் பதத்துக்குப் பொருள் யாது?

விடை:- முன் நிச்சயிக்கப்பட்ட போக்தாவினது சொரூபத்தில் இரண்டு அம்சங்கள் உண்டு. ஒன்று சத்திய அம்சம், மற்ருென்று கற்பித அம்சம். அதிஷ்டான சைதன்யம் சத்திய

அம்சம், ஆபாசனோடு கூடிய அவித்தை அல்லது அந்தக் கரணம் கற்பித அம்சம். ஆபாச சகித அவித்தை அல்லது அந்தக்கரணம் சுழுத்தி அவத்தையில் அதிஷ்டான சைதன் யத்தில் லயத்தை அடைகிறது. பின் சாக்கிராவத்தையில் அதினின்றும் உற்பன்னமாய் அனுகூலப் பிரதிகூல விஷயங் களால் சுகதுக்கங்களை அனுபவிக்கிறது. ஆகையால் போக்தாத் தன்மை தர்மத்தோடு கூடிய ஆபாச சகித அவித்தை அல்லது அந்தக்கரணத்தினது உற்பத்தி லயங் களுக்கு ஆதாரமாயுள்ள அதிஷ்டான சைதன்ய கூடஸ்தன் ஆதாரத் தலைவன் என்று நிச்சயிக்கப்பட்டது. அல்லது சாக்கிராவத்தையில் அனுகூல அல்லது பிரதிகூல மனோமய விஷயம், அவற்றை விஷயம் பண்ணும் மனோரூப விருத்தி சுகம் அல்லது துக்கமாய போகத்தை அனுபவஞ் செய்யும் ஆபாசன் ஆகிய திரிபுடி எந்த சொரூபத்தின்கண் உற்பத்தி யாகி லயத்தை அடையுமோ அப்படிப்பட்ட அதிஷ்டமான சாக்ஷி சைதன்ய கூடஸ்தன் ஆதாரத் தலைவன் என்று நிச்சயிக்கப்பட்டது.

இப்படி நிச்சயிக்கப்பட்ட ஆதாரத் தலைவனே தனது அதாவது ஜீவனது நிஜ சொரூபமாகிய கூடஸ்தன். இந்த கூடஸ்த சொரூபமே நான். இந்த நானே உற்பத்தி, திதி, லயங்களைச் செய்யும் ஆபாச சகித மாயா விருத்திக்குச் சாக்ஷி யாகிய பிரஹ்மம் என்று அபரோக்ஷமாய் அறிகிறவனுக்கு சனனமரண சம்சாரமாகிய பந்தம் இல்லை. அவனுக்கு பர மானந்தமாகிய மோக்ஷம் உண்டாகும் அதாவது பரமானந்த சொரூபமாய் இருக்கிறான்.

தேகம் தேவாலயம். ஜீவன் அதாவது ஜீவனது நிஜ வடிவு கூடஸ்தன் சிவம். அஞ்ஞானம் என்கிற நிர் மாலியத்தைத் தள்ளி சிவமே (பிரஹ்மமே) நான் என்னும் பாவனையால் பூஜிக்கவேண்டியது. தான் பிரஹ்மம் என்று அறிகிறதே ஞானம். மனம் சர்வ விஷயத்தை விட்டிருப்பது தான் தியானம். சகல பாவனையுந் தள்ளி மிச்சமானது எதுவோ அதுவாகக் கடவாய். பார்க்கிறவன் பார்வை,

பார்க்கப்படும் வஸ்து இவைகளை வாசனையுடன் தள்ளிவிட்டு விளங்குகிற சிரேஷ்டமான ஆத்மாவையே பஜிக்க வேண்டியது.

ஆபாச சகித அந்தக்கரணத்தில் போக்தாத் தன்மை தர்மம் இருக்கிறதென்று சொன்னது மூன்று சத்தை வாதப் படி. ஆபாச சகித அவித்தையில் போக்தாத் தன்மை தர்மம் இருக்கிறதென்று சொன்னது இரண்டு சத்தை வாதப்படி.

---




## நான்காம் கடிதம்

### நான் யாரென்னும் ஆன்ம விசாரம்.

பிறப்பிறப்பு சுகதுக்கங்கள் ஜீவர்களது கர்மானுசாரப்படி சுபாவமாய் வரும். ஜீவ பேதங்களையும் கர்ம பேதங்களையும் வரையறுத்துச் சொல்லமுடியாது. இந்த அர்த்தத்தையே

இவ்வகையே சிற்பாவ சீவபேத மியல்
வடிவாம் பிரம்மத் தினிடையே னின்று
வவ்விய பாவனையாலே வந்த கோடி
வாரா னின்ற கோடி வருவகோடி
தெய்வ வரையருவி நீர்த்துளிகள் போல
சிலர் பிறப்பிலொன் றிரண்டின் மூன்றிற் சேர்ந்தார்
நைவரு சென்மங்கள் சிலர் நூற்றின் மிக்கார்
நாடறிய பவஞ்சிலர்கள் நண்ணி நின்றார்.

கையினுலறை யுண்ணும் பந்துபோலக் காலனு
லறை யுண்டு கணக் கிலாத
மெய்யிலே புகுந்தலுத்து விவேகம் பெற்றும்
விரகிலார்சிலர் பிறப்பின் மீண்டும் வீழ்ந்தார்
ஐயினுற் மூன்றுலகாம் பணதி செய்து
வருநிற்கும் போமாகி வளர்ந்து வாளா
பொய்யினுல் மிக விரியும் வேலையூடே
பொருதிரைபோற் பரபதத்தே புரிந்த மாயை.

என்று வசிட்டரும் சொல்லியிருக்கிறார்.

ஆதலால் அஞ்ஞானத்தால் உண்டாகிய சீவபேத சங்கற்பங்களும் கர்மங்களும் அறில் சனன மரண சம்சார துன்பம் இல்லாமற் போம். இந்த அர்த்தத்தையே வசிட்டர்

**பிரிந்த சுரர்நரர் முதலோர் தத்தம்**
**சங்கற் பத்தாற் பிறவி யுற்ருர்**
**தெரிந் தனைய சங்கற்ப மதில்**
**பிறவார் நெய்மாண்ட தீபம் போல**

என்று சொல்லியிருக்கிருர்.

ஆதலால் அஞ்ஞானத்தோடு சங்கற்பாதிகள் விடுவதற்கு ''நான் யார்'' என்னும் விசாரம் செய்யவேண்டும். அவ் வான்ம விசாரத்தைப் பற்றி எழுதுவாம்:—

சகல சீவர்களின் இச்சைக்கு விஷயமாகிய சர்வ துக்க நிவிர்த்தி பரமானந்தப் பிராப்தி வடிவ மோக்ஷத்தை அடைய பிரஹ்மான்ம ஐக்கிய ஞானமே சாதனம்.

**மெஞ்ஞான மென்பது தான் மனத்தின்**
**கட்டு விடுத லிதுவே வீடுபேறும்**

என்ற வாசிட்டச் செய்யுளால் ஞானமே மோக்ஷ சாதனம் என்று நிச்சயிக்கப்படுகிறது.

**நான் யாரென் றெண்ணுகின்ற போத**
**விசாரம் மனத்தின் வித்தை பொன்றுவிக்கும் கனல்**

என்ற வாசிட்டச் செய்யுளின்படி நான் யாரென்னும் விசாரம் தானே ஞான சாதனமாம். ஆகையால் சம்சாரம் துன்பம் என வெறுத்து மோக்ஷத்தில் தீவிர இச்சையுடைய அதிகாரிகள் தம் விவகாரம் ஒழிந்த காலங்களில் நான் யார் என்னும் விசாரம் செய்யவேண்டும். நான் என்னும் பதத்தின் வாச்சியம் மன விசிட்ட சேதனம். லக்ஷியம் சுத்த சேதனம். அது சுயம்பிரகாசம். சுயம்பிரகாசமாவது தனது சத்தையினுல் சம்சய விபரீதங்கள் இன்றி விளங்குவது. எப்படி யென்ருல் நான் இருக்கிறேனு இல்லையா என்ற சந்தேகம் ஒருவருக்கும் இல்லை. நான் இல்லை என்ற விபரீதம் ஒருவருக்கும் இல்லை. நான் என்பது அன்னிய பிரத்தியக்ஷ அனுமானதிப் பிரமாணங்களின் அபேக்ஷையின்றி தனது சத்தையினுலேயே விளங்குகின்றது. இவ்விதத்தால் நான்

என்பது சுயம்பிரகாசமாம். இந்த நான் என்னும் சுயம் பிரகாச தத்துவத்திற்கு நாம ரூபம் காமக் குரோதாதி வடிவ சலனம் ஒருமை பன்மை முதலிய விகற்பமான கற்பனைகள் இல்லை. ஆகையால் நான் என்பது அதி சூக்ஷுமமாயும் அசலமாயும் அத்வைதானந்தமாயும் இருக்கிறது. தனக்குத் தானே பிரியமா யிருத்தலால் ஆனந்தமாம். அப்படியானல் நான் அதிசூக்ஷுமம அசல அத்வைதானந்தமாய் ஏன் விளங்க வில்லையெனில் அனாதி கற்பித அஞ்ஞானம் ஆத்மாவில் பேதத்தை மிகக் கற்பித்து நான் அதிசூக்ஷுமம அசல அத்வை தானந்தம் அன்று இல்லை விளங்கவில்லை யென்று மறைத்து நான் பிராமணன், நான் க்ஷத்திரியன், நான் சந்நியாஸி, நான் கிரகஸ்தன், நான் கண்டேன், நான் கேட்டேன், நான் பலவான், நான் செய்தேன், நான் செய்யவில்லை, நான் சங்கற்பித்தேன், நான் நிச்சயித்தேன், நான் அறியேன், நான் அறிகிறேன் என்று நான் என்னும் சுயம்பிரகாசத் தன்மையை மறைக்காமல் இவ்வித அத்தியாசக்கற்பனைகளைப் புரிகிறது. எதுபோலவெனின், அரசனது சொப்பனத்தில் நித்திராஞ்ஞானம் அரசனிடத்தில் பேதம் மிகக் கற்பித்து அரசத் தன்மையை மறைத்து நான் பிச்சைக்காரன் என்று நான் என்பதை மறைக்காமல் பிச்சைக்காரக் கற்பனை புரிவது போலும்.

நானென்னும் தத்துவம் சுயம்பிரகாசம் என்று

அக மகமென் றனைத்து யிரினிடத்து
மிருந்து அனவரத முறைப் பதாகி
நிக ழொளியா மான்ம தத்துவமான
சொரூபத்தை நினைத்தல் செய்வாம்

வாசிட்டத்தும், "**சுயம்** (சுயம்பிரகாச அபரோக்ஷ) **ஆத்மா பிரஹ்மம்**" என்று மாண்டூக்கிய உபநிடதத்தும் சொல்லப் பட்டிருக்கிறது. இவ்வித சுயம்பிரகாச ஆத்மாவுக்கு அஞ் ஞானத்தால் கற்பிக்கப்பட்ட தேகாதிகளோடு உள்ள அத்தியாச வைக்கியத்தால் நான் பிறந்தேன், புண்ணியத்தை செய்தேன், பாவத்தைச் செய்தேன், சுகித்தேன். துக்கித்தேன்,

இறந்தேன் என்னும் இவை முதலிய சம்சார பந்தம் தோற்று கிறது அத்தியாசமாம். உண்மையாய் இன்று, மற்ருே யாதொரு களங்கமும் இன்றி அத்வைதானந்த பிரஹ்ம சொரூபமேயாம். ஆனபடியால் யான் யான் என்று தேகாதிகளோடு அத்தியாச வைக்கியமாய்க் கலந்திருக்கும் இவ் வான்மாவை நான் யாரென்னும் விசாரத்தால் வேறு பிரித்து சுயம்பிரகாச நான் அத்வைதானந்த ப்ரஹ்மமே என்று அபரோக்ஷமாய் அறியவேண்டும். இதனை

என்னுடைய புந்திபி னுடலெண் ணினேனு
னிச்சக னுனல்ல மலவுட னுனல்ல
துன்னு பொறிகளு மல்ல மனமுமல்ல
தொடர் புந்தியல்ல வகங் காரமல்ல
இன்ன சடமாதலினு லெனலுங் கும்ப
னிவையன்றேல் வேருர்நீ யியம்பு கென்ன
மன்ன னுரைப்பா னெல்லாம் படைத்
தளித்த மாசறு சின்மாத்திரமாம் வடிவநானே

என்று வசிட்டரும் தேகாதிகள் சடமாதலினுல் நானல்ல வென்று நேதி பண்ணி தேகாதிகள் எல்லாவற்றினது உற்பத்தி லயங்களுக்கு விவர்த்தோபாதான காரணமாயும் யாதொரு களங்கமும் இல்லாததாயுள்ள சுயம்பிரகாச அத்வைதானந்த பிரஹ்மமே நான் என்று சொல்லியிருக்கிருர்

இந்த விசாரத்தையே சங்கராச்சாரிய சுவாமிகளும் அருளியபடி

ஒது மண்ணிலே உதகமிங்கிலே யொளிரு தேசிலே காலிலே
பூத விண்ணிலே யிந்தியமிலே புகன்றவை களின் றிறனிலே
யேதுமே விபசார மேவி யிறப்பதாலிச் சுழுத்தியின்
மீதி யாயுள பூரணனந்த மேனியான சிவோகமே

பஞ்ச பூதங்களும் இல்லே. பஞ்ச பூதங்களின் காரியமாகிய தேகாதிகளும் இல்லே. இந்திரியம், மனம், புத்தி, சித்தம், அகங்காரம், சீவன், அஞ்ஞானம் இவற்றின் கூட்டங்களாகிய இவைகள் உற்பத்திக்கு முன் இல்லாததாலும், மத்தியில்

ஒன்று தோற்றும்போது மற்றென்று தோற்றுமல் பிறழ்ச்சி அடைகிறதாலும் சுழுத்தியில் சர்வமும் லயமாகி அத்தியந்த அபாவமாகி விடுகிறது. ஆகையால் இவைகள் எப்போதும் இல்லவே இல்லை. சுழுத்தியில் எல்லாம் லயமாகி சேடமாயும் சச்சிதானந்தமாயும் இருக்கிற சிவமே நான் என்று சொல்லி யிருக்கிறுர். ஆனபடியால் சர்வ முமுக்ஷுக்களும் இப்படிப் பட்ட ஆன்ம விசாரத்தைப் பூரணமாகச் செய்து தேகாதிகளில் நானென்றெழும் அனுத்ம வாசனையை அத்தியந்தம் கரைத்து சுயம்பிரகாச அத்வைதானந்த பிரஹ்மமே தானுய் தன்னில் கலந்து சுகிக்குக.

உச்சமு றுபதம் வேண்டி லனைத்து
வாதனையிலு னின் றுள்ளந் தன்னை
நிச்சய மாமுணர்வாலே னீக்கு
வாய் மலரின் மணநீங்கு மாபோல்
துச்சமுறு வாதனையாந் தரங் கனீர்
பவக் கடலிற் றுளைவார்க் கெல்லா
மச்சமற நல்லறிவு மரக் கலமாய்க்
கரை யேற்று மயலொன் றுண்டோ

என்று இதனையே வசிட்டர் அருளியபடி விசார ஜன்னிய அபரோக்ஷ ஞானமே மோக்ஷ சாதனமாம். இதனை குரு வருளால் ஊகித்துணர்க.

---

## ஐந்தாம் கடிதம்.

### ஆனமானு!சந்தானத்துக்கு உரித்தான விசாரம்.

மனதால் செய்யப்படும் கிரியை கிரியை ஆகும். மனதால் செய்யப்படாத கிரியை கிரியை அன்றும். மனம் என்பது தூல சூக்ஷ்ம சரீரங்களை நானென்று அபிமானித்துக்கொண்டு கர்த்திருத்வ போக்திருத்வ தர்மத்தோடு சப்தாதி விடயங் களில் ராக த்வேஷ வடிவமாக சலிக்கும் அறிவாகும். இப்படிப்பட்ட மனத்தால் செய்யப்படுவது கிரியையாம்.

இப்படிப்பட்ட மனத்தால் செய்யப்படாதது கிரியை அன்றும். விடயங்களில் பொருந்திய இம்மனத்தின் அலேவு ஒழித்தோர் அதாவது தூல சூக்ஷுமம சரீர அபிமானமும் கர்த்திருத்வ போக்திருத்வத்தோடு விடயங்களில் ராகத்வேஷ வடிவமாக சலிக்கும் சலனத்தையும் தியாகம் செய்தோர் மிகவும் நல்ல தியானத்தோர் அதாவது திடமான பிரஞ்ஞை உடையவர்கள் இப்படிப்பட்ட தூய மனம் ஆயிடில் பிறப்பு இறப்பாகிய மயக்கம் கெடும்.

இதற்குப் பிரமாணம்: — வாசிட்டம்

ஆய மனத்தின் செயல் செயலா மதனு
  லொழிந்த தொழிந் துளதாம்
மேய மனத்தி னலேவொ ழிந்தோர் மிகவு
  நல்ல தியானத் தோர்
தூய மனமா யிடில் வெற்பாற் சுழலாக்
  கடல்போற் பிறப் பிறப்பா
மாயை மயக்கங் கெடு மென்னு வசிட்டன்
  மீண்டு முரை செய்வான்

சகலருக்கும் துன்பத்தைத் தரா நின்ற சம்சாரமாகிய மாயை யென்னும் நச்சு மரம் எதனுல் வளரு மென்றுல் விருத்தி அடையா நின்ற நானு போகங்களில் இது ரமணீயம் என்றெண்ணும் சங்கற்ப ரூபம் ஆகிற அநேக மனே விருத்திகள் என்னும் அங்குசங்களால் வளரும். இப்படி சம்சார விருக்ஷத்தை வளர்க்கும் இம்மனநோய்க்குப் பரிகாரம் ஏதென்றுல் மேலோர் விதித்தபடி வருத்தப்படாமல் அநாயசமாக இம் மன நோயை நீக்கலாம். இதற்குப் பிரமாணம் வாசிட்டம்: —

தூேயா நிற்கும் பலபோகச் சங்கற் பஞ்சேர் மனவிருத்தி
முளேயால் வளரு மாமாயை மோக மென்னு நச்சுமரம்
விளேயா நின்ற மனநோய்க்கு மேலோர் விதித்த பரிகாரம்
இளேயா தெளிதா யதனுலே யியற்ற லாகுமிது கேட்பாய்.

அந்தப் பரிகாரம் ஏதென்றுல் மிகவும் மயக்கம் தரா நின்ற நானுவித விடயங்களேப் பொருந்தாது அவைகளேத்

தியாகம் பண்ணுதலே இம்மன நோய்க்குப் பரிகாரம். சகலத்தையும் விடுதலாகிய இந்நிராசையானது சுகமாயும் இலேசாயும் தனக்குத் தானே சுதந்தரமாயும் இயற்றக் கூடியதாம். சகல துன்பங்களையும் நாசம் செய்கின்ற இந்நிராசை பெறுதவர் மானிடக் கிருமிக்கு இணையாவர். ஆதலால் சான்றோர் உரைத்த சாஸ்திரங்களை குரு முன்னிலையில் கேட்டபடி அப்பியாசம் செய்து தேகாதிகளில் நான் என்னும் அகங்காரம் இன்றிய மனதால் விடயங்களில் மயங்கி சனன மரண சம்சாரத்தை விருத்தி பண்ணும் மனதைக் கெடுக்கவேண்டும். இதற்குப் பிரமாணம் வாசிட்டம்:—

மிகமா லுறுபல்பொருள்களைய மேவா தொழித்தோர் மனம் வென்றோர்
சுகமா யெளிதாய்த் தனக்குரித்தாந் துயர்தீர் நிராசை யறிவரியோர்
சகமா மனிதப் புழுவொப்பார் சான்றோ ருரைத்த நூற்பழகி
அகமா நினைவு தீர்மனத்தா லயரு மனதைத் திருப்பிடலாம்.

அரம் ஆகிய இரும்பினுல் இரும்பு திருத்தப்படுவது போல் அப்பியாசம் செய்யாநின்ற மனதால் மனம் திருந்தும். மீளாத நிராசை வடிவத்தோடும் முயற்சியோடும் கூடிய தன்னுல் சாதிக்கக் கூடியதாய் முமுக்ஷுவுக்குச் சுலபமாய் இருக்கும் இம்மனத்தின் உபசாந்தியே சனன மரணம் என்னும் பெரும் பாரத்தை நாசம் செய்யும் நன்மார்க்கம். அன்னிய மார்க்கம் நன்மார்க்கம் ஆகா. இதற்குப் பிரமாணம் வாசிட்டம்: —

இரும்பா லிரும்பு திருந்துவபோ லியற்று மனத்தான் மனந் திருந்துந்
திரும்பா நிராசை வடிவாகிச் செரியுந் தன்னு லியற்றுவதாய்
விரும்பா நின்றோர்க் கெளிதான வெய்ய மனத்தி னுபசாந்தி
பெரும்பா ரந்தீர் நற்கதியாம் பிறிதோர் கதியு நன்றுகா.

ஆகையால் விடயங்களில் தாவிச் செல்லாநின்ற மனதை அசங்கற்பம் என்னும் வாளால் நாசம் செய்க. நாசம் செய்தால் எங்கும் பரிபூரணமாய் நிறைந்து யாவுந் தானுய் விளங்கும் பொருள் தோன்றும். இம்மனோ நாசம் என்னும் சன்மார்க்கத்தினின்று அகம் பிரஹ்மாஸ்மி என்னும் விருத்தி ஞானத்தினுல் மனதை இல்லாமல் செய்து அதன்பின் மாயா விகற்பம் ஆகிய பிரபஞ்சத்தை ஈதன்று ஈதன்று என நேதி செய்து மன முதல் சகலத்தையும் கடந்து உபசாந்தி பதமாகிய பிரஹ்மான்மாவை சாக்ஷாத்கரிப்பாய்.

இதற்குப் பிரமாணம்:— வாசிட்டம்

**வாவு மனத்தை யசங்கற்ப வாளா லறுக்கி னிறைந்தெங்கும்**
**மியாவு மதுவாம் பொருடோன்று மிந்த வழிநின் றறிவாலே**
**மேவு மனதை விழுங்கியதின் மேலாய் மாயாவி கற்பமெலா**
**ஓவு மதியா லறிவுகடந் துளத்தை விழுங்கும்பொரு**
**ளுணர்வாய்.**

நான் யாரென்று விசாரம் செய்வதால் திட அபரோக்ஷ ஞானம் உண்டாகும் என்பது சுருதிக்கும் பெரியோர்களுக்கும் சம்மதமானது. இதற்குப் பிரமாணம் — கைவல்யம்

**இந்த ஞானந்தான் வருவதெப் படியெனி லிடைவிடா**
**விசாரத்தால்**
**வந்த டைந்திடும் விசாரந்தா னேதெனின் மனுதியாந்**
**சரீரத்தில்**
**இந்த நானெவன் சித்தெது சடமெது விரண்டுமொன்**
**றக்கூடும்**
**பந்த மேதுவீ டேதென வுசாவுதல் பகர்விசா ரமதாகும்.**

நான் என்பது எதுவென்று விசாரிப்பாம். இதனை முன்னமே 3-வது கடிதத்தில் விரிவாக கூறப்பட்டிருக்கிறது. இப்போது சுருக்கமாய் எழுதுவாம். அகங்காரம், ஆபாசன், அதிஷ்டான சாக்ஷி சைதன்யம் இம்மூன்றும் சேர்ந்து நான் என்பதின் வாச்சியார்த்தம். அகங்காரம் சடமா னுலும் சொச்சத்திரவியம் ஆனதால் ஆத்மாவின் ஆபாசத்தை கிரகித்து சாக்கிர சொப்பன அவத்தைகளில் தூல சூக்ஷும சப்தாதி விடயங்களை அறியும். சுழுத்தி அவத்தையில்

அவித்தையில் லயமாகி அதிலுள்ள ஆபாசன் ஆத்மாவோடு ஒருமையை அடையும். எப்படிப்போலவென்றால், அகங்காரம் அடங்கும் சுழுத்தி அவத்தையில் அவித்தை உள் அறை நித்திரை கதவு. சுழுத்தியிலுள்ள அவித்தை எந்த பிரகாசத்தால் விளங்குகிறதோ அந்த சுயம்பிரகாச அறிவு வடிவ சாக்ஷி சைதன்யம் தீபம். காலகன்ம பரிபாகம் காற்று. அந்தக் காற்றினால் நித்திரையாகிய கதவு திறக்கப்படும். அதன்பின் அகங்கார வடிவ புத்தி வாசற்படி வெண்பளிங்குக் கல். அதில் சாக்ஷி சைதன்ய வடிவ தீபம் பிரதிபிம்பிக்கிறது. அது சீவன் என நின்று, பின் சொப்பனம் நடுமனை, அதனை ஆபாச சீவன் பிரகாசிக்கிறது. பஞ்ச ஞானேந்திரியங்கள் நடுமனையில் உள்ள சன்னல்கள், வெளிமுற்றம் சாக்கிரம், காலகன்மபரிபாகக் காற்றினால் ஞானேந்திரியங்களாகிய சன்னல்கள் திறக்கப்படும். அப்பொழுது அவ்விந்திரியங்களின் வழியாக ஆபாச சீவன் வெளி முற்றம் ஆகிய சாக்கிரத்தை பிரகாசிக்கிறது. காலகன்மபரிபாகக் காற்றினால் நித்திரை வடிவ கபாடம் அடைத்துக்கொண்டால் நனவு கனவு வடிவ வெளிமுற்றம் நடுமனையை பிரகாசிக்கும் ஆபாச அறிவானது தனித்து நிர்மலமாய் இருக்கும் பிரத்தியக் ஆன்மாவை அடைந்து ஒருமையை அடையும். இந்தப்படி சாக்கிர சொப்பனங்களில் அறிதல் அறியாமை விவகாரங்களுக்கு ஏதுவாய அகங்கார வடிவ புத்தியையும் சுழுத்தி அவத்தையில் புத்தியின் அபாவத்தையும் நிர்விகாரமாய் இருந்து அறியும் சாக்ஷி சைதன்ய வடிவ பிரத்தியக் ஆன்மாவே நான் என்று விசாரித்து அறிய வேண்டும்.

---

# ஆறும் கடிதம்.

## மாயையும் அதன் நிவிர்த்தியும்.

தான் அல்லாததாகிய சரீர முதலியவற்றில் நான் என்னும் பாவனேயே மாயை ஆகும். இதற்குப் பிரமாணம் வாசிட்டம்:-

தானலா தானவுடன் முதற்பொருளிற் ருனெனும்
பாவனேயாய
யூனமா மாயை.......................................... ...

தன்னுடைய மனத்தின்கண் உண்டாகும் சங்கற்ப விகற்பங்களே சுகதுக்க சனன மரண சம்சார பந்தத்துக்கு ஏதுவே யொழிய வேறில்லே. அது நீங்கில் மாயையினுல் ஒரு பிரயோசனமுமில்லே.

இதற்குப் பிரமாணம்:— வாசிட்டம்

தன்னுள் விகற்பித்தெழுந்த விகற்பம் போகிற் றவிர்ந்திடும்
மாயையிற் பயனேர் சற்றுமில்லே.

மனதுக்கு சத்துவ குணமே உண்மையான சொரூபம். ரஜோகுணமும் தமோகுணமும் அவைகளின் காரியமாகிய லோக வாசனே, தேகவாசனே, சாஸ்திர வாசனே, இராகத் துவேஷம், காமக் குரோதம் என்று சொல்லப்பட்ட அசுர வாசனே தன்னுல் கற்பிக்கப்பட்டவை. முயற்சியினுல் இவை நீக்கப்பட்டால் மனம் ப்ரஹ்மத்தோடு ஒன்ருய் சமாதியில் நிற்கும்.

இதற்குப் பிரமாணம் கைவல்யம்:—

மனது சத்துவ சொரூபம் மற்றிரண்டும்
வந்து கலந்தன வவற்றை மாற்றினுற்போம்
தனது சன்மார்க்கத்தை விடாதிருந்த போது
தமோகுணமும் ரசோகுணமும் சமிக்கும் பின்னே
கன பரிணுமஞ் சலனம்போம் போனக்காற்
களங்கமற்று நின்ற வாகாசம் போலும்
நின துனமப்படி யாமப் பிரமத் தொன்ருய்
நிருவிகற்ப சமாதியிலே நிற்குந் தானே.

இந்த விதமாய் சமாதியில் நின்று வேறென்றும் நினைந் திடாதிருந்தால் இந்த மாயை நிவிருத்தியாகும். இதைத் தவிர வேறொரு உபாயம் சுருதிகளிற் காணப்படவில்லை.

இதற்குப் பிரமாணம்:— கைவல்யம்

**வாயுத் தம்பனம் சலத்தம்பன மணி மந்திர மருந்தாலே**
**தேயத் தம்பனஞ் செய்திடி லதிற் சிறந்த சத்திகளெங்கே**
**நீயச் சச்சிதானந்தமாய் வேறென்று நினைந்திடா திருப்பா யேல்**
**மாயச் சத்திபோ மிதன்றி மந்திர மறைகளிற் காணோமே**

ஆதலால் தன்னிடத்தில் தானாகவே சுகிக்கவேண்டியது. மேலுங் கீழுமாக சொப்பனம் போலும் தோன்றும் இந்த மாயா பிரபஞ்சத்தை சிந்திக்கக் கூடாது.

---

## ஏழாம் கடிதம்

### தத்துவமஸி என்னும் மகாவாக்கியத்தின் அர்த்தம்

தத்துவமஸி மகா வாக்கியத்தில் தத், துவம், அஸி யென மூன்று பதங்கள் உண்டு.

தத் என்னும் பதத்தின் அர்த்தம்:- சிருஷ்டிக்கு முன்னர் சசாதீய விசாதீய சுவகத பேதமற்ற ஒரே அத்வைதீய சத் வஸ்து இருந்தது. அதற்கு இப்பொழுதும் அத்தன்மை யிருத்தலால் தத் (அது) என்று சொல்லப்படுகிறது. எப்படிப் போல என்றால் சர்ப்ப தண்டாதி பிராந்தி அத்தியாசமாகிய சிருஷ்டிக்கு முன்னே ரஜ்ஜு இருந்தபடியே நிர்விகாரமாய் இருந்தது. ரஜ்ஜு அஞ்ஞானத்தால் சர்ப்ப தண்டாதி அத்தி யாசமாகிய சிருஷ்டி தோன்றிய காலத்தும் ரஜ்ஜு இருந்த படியே இருக்கிறதுபோல.

துவம் பதத்தின் அர்த்தம்:- கேட்பவனது தேகேந்திரி யங்களுக்கு அதீதமாகிய வஸ்து துவம் (நீ) என்று சொல்லப் படுகிறது. அதாவது திருசிய நாமரூப வஸ்துக்களை இது

கடம் இது படம் என்று சுட்டி அறியும் சீவன் ஆகிய ஞாதுரு கடபட ஆகாரமாகிய விருத்தி ஞானம், கட பட விடயமாகிய ஞேயம். இந்த திரிபுடிகள் பூரணமாய் இருந்தால் விவகாரம் நடக்கும். இல்லாவிட்டால் நடக்காது. துவம் (நீ) என்னும் வஸ்துவானது திரிபுடிகள் பூரணமாயிருந்தால் அவற்றையும் அறியும். பூரணமாயில்லாவிட்டால் பூரணமின்மையையும் அறியும். அப்படியே விவகாரம் நடந்தால் அவற்றையும் அறியும். விவகாரம் நடக்காவிட்டால் நடத்தலின்மையையும் அறிகிறது. இப்படி அனுபவமாக விளங்கும் சாக்ஷி சைதன்யம் தேகேந்திரிய அதீத வஸ்துவாம். இதைத்தான் சுருதியானது துவம் (நீ) என்னும் பதத்தால் சொல்லியது.

அசியென்னும் பதத்தின் அர்த்தம்:- தத் துவம் என்னும் இரண்டு பதங்களின் அர்த்தம் ஒன்று என்பதே அசி (இருக்கிருய்) என்னும் பதத்தின் அர்த்தமாம். அது எப்படியென்ருல் ஒரே ஆகாயம் கட மட உபாதியால் கடாகாயம் மடாகாயம் என்று சொல்லப்படுகிறது. கட மட உபாதி நீக்கத்தால் ஏகாகாயமாய் இருக்கிறது. அதுபோல ஆகாசாதி சிருஷ்டிக்கு ஏதுவாகிய மாயோபாதியாலும் திரிபுடி விவகாரங்களுக்கு ஏதுவாகிய அவித்தியோபாதியாலும் பிரஹ்மம் ஆத்மா யென்ற பேதமே ஒழிய உபாதி நீக்கத்தால் சொரூபமாக இரண்டும் அபேதமாம். இதைத்தான் அசி(இருக்கிருய்) என்னும் பதம் போதிக்கின்றது.

ஆதலால் பிரஹ்மாத்ம ஐக்கியம் அனுபவிக்கப்பட வேண்டும். அதாவது அகம் பிரஹ்மாஸ்மி (நான் பிரஹ்மமாய் இருக்கிறேன்) என்னும் மகா வாக்கியத்தை இடைவிடாமல் பாவிக்க வேண்டும்.

---

# எட்டாம் கடிதம்.

## நான் சச்சிதானந்த சொருபம் என்பதை சுருதி, யுக்தி, அனுபவத்தால் விளக்குவது.

சரீரத் திரயங்களைத் தானென்றும் மனைவி புத்திராதிகளை எனதென்றும் எண்ணுகிற அபிமான அத்தியாசமே பந்தம். இதை விசாரித்து சரீராதிகளும் நானன்று மனைவி புத்திராதிகளாய பந்துக்களும் என்னுடையதன்று என்று இந்த அபிமானத்தை நீக்கி சச்சிதானந்த பிரஹ்மமே தானாக இருப்பதே மோக்ஷமென்று சுருதிகளில் சொல்லப்படுகிறது.

இதற்குப் பிரமாணம் வாசிட்டம்:— **"தோற்றுடல் நானென்னுமை சுருதிகள் சொல்லுமுத்தி"**. இப்போது நான் சச்சிதானந்த சொருபம் என்பதை சுருதி, யுக்தி, அனுபவங்களால் விளக்குவாம்:—

மனோ விருத்தியானது சுரோத்திராதி இந்திரியங்களின் வழியாக அனுகூலப் பிரதிகூல சப்தாதி வடிவ பரிணமத்தை அடைதல் சாக்கிராவத்தையாம். நித்திரையில் கேவல மனமே அனுகூலப் பிரதிகூல சூக்ஷ்ம சப்தாதி வடிவ பரிணமத்தை அடைதல் சொப்பனவத்தையாம். மனமானது அவித்தையில் லயத்தை அடைந்து சுகாகாரமாக பரிணமத்தை அடைதல் சுழுத்தி அவத்தையாம். ஆதலால் இம்மூன்று அவத்தைகளும் மனோ பரிணமமே. இம்மனோ பரிணம அவத்தைகள் ஒன்றில் ஒன்றில்லாமல் நாசத்தை அடைந்தாலும் நான் அவற்றின் உற்பத்தி நாசங்களுக்கு ஆதாரமாய் இருத்தலால் நான் சத்தாய் இருக்கிறேன். மனோ பரிணமங்கள் சடங்களாம். ஆதலின் தங்களுடைய உற்பத்தி நாசங்களை அறியமாட்டா. மற்றோ இவற்றின் உற்பத்தி நாசங்கள் என்னால் அறியப் படுகிறதால் நான் சித்தாய் இருக்கிறேன். இம்மனோ பரிணமங்களை துக்க ரூபமாக விட்டுவிட்டாலும் தன்னை விட முடியாத பிரியத்தினலே நான் ஆனந்தமாய் இருக்கிறேன். அதலால் மனோ பரிணமங்களாய மூன்று அவத்தைகளும் நானும் அன்று; என்னுடையதும் அன்று. இவற்றிற்கு வேறாக நான் சச்சிதானந்தமாய் இருக்கிறேன் என்பது சுருதி.

சத்தாய் இருக்கிற நானே சுக துக்கங்களை அறிந்து கொண்டிருக்கிற சித்தாய் இருக்கிறேன். சத்துக்கு அந்நிய மான சித்து இருப்பில் அது அசத்து ஆகும். அசத்து ஆயின் அது சாக்ஷியாதல் (சித்தாயிருப்பது) எவ்விடத்தும் பொருந் தாத தோஷம் சித்துக்கு ஏற்படும். ஆதலால் சத்தாய் இருக்கிற நானே சித்தாய் இருக்கிறேன்; சித்தாய் இருக்கிற நானே சத்தாய் இருக்கிறேன். சித்துக்கு அன்னியமான சத்து இருப்பில் அது சடம் ஆகும். சடம் ஆயின் அதற்கு இருப்பு கிடையாது. நாசத்தை உடையதாகும் தோஷம் சத்துக்கு ஏற்படும். ஆகையால் சித்தாயிருக்கிற நானே சத்தாய் இருக்கிறேன். சத்துச்சித்தாய் இருக்கிற நானே ஆனந்தமாய் இருக்கிறேன். சத்துச் சித்துக்கு அன்னியமான ஆனந்தம் இருக்குமாயின் அது அசத்து சடம் ஆகும். அசத்து சடங் களில் சுகானுபவம் இல்லை. அதாவது சுகானுபவம் இல்லாத தோஷம் ஆனந்தத்துக்கு ஏற்படும். ஆதலால் சத்துச் சித்தாய் இருக்கிற நானே ஆனந்தமாய் இருக்கிறேன். இந்தவிதமாய் நான் சச்சிதானந்தமாய் இருக்கிறேன் என்பது யுக்தி.

சுழுத்தியிலிருந்து விழித்து எழுந்த ஒருவன் நான் சுக மாய் தூங்கினேன் என்று சொல்லுகிறான். இப்படி சுழுத்தியில் தானாக அனுபவிக்கப்படும் ஆனந்தம் சாக்கிரத்தில் ஸ்மிருதி வடிவமாம். ஆதலின் ஆனந்தம் சத்துச் சித்துக்கு அன்னிய மாய் இல்லை. எப்படி எப்படி அனுபவமோ அப்படி அப்படி ஸ்மிருதி உண்டாகும் என்பது நியமம். ஆனந்தத்துக்கு அன்னியமாய் சத்துச் சித்து இருக்கும் பக்ஷத்தில் சுழுத்தி யினின்று எழுந்தவனுக்கு நான் சுகத்தை அறிந்தேன் என்று ஸ்மிருதி உண்டாக வேண்டும். ஆனால் அப்படி உண்டாகிற தில்லை. மற்றோ நான் சுகமாய் இருந்தேன் என்று ஸ்மிருதி உண்டாகிறது. ஆதலால் சுழுத்தியில் ஆனந்தத்துக்கு வேறாக சத்துச் சித்து இல்லை. ஆனந்தமே சத்துச் சித்தும் ஆம். இந்த விதமாய் சுழுத்தியில் ஆனந்தமாய் இருந்து அஞ்ஞான மாகிய இருளை அறிந்துகொண்டு இருப்பதால் நான் சச்சி தானந்த சொரூபம் என்பது அனுபவம்.

இப்படி சுருதி, யுக்தி, அனுபவம் விடாமல் அனுகூலப் பிரதிகூல நாமரூப விடயாகாரமாகப் பரிணமிக்கும் மனோ விருத்தியைக் கெடுத்து அம்மனோவிருத்தியை தனது

எதார்த்த சச்சிதானந்த சொரூபமாய் நிலைக்கும்படி நாள் தோறும் அப்பியாசம் செய்யவேண்டும். அதாவது அனுத்மாகாரவிருத்தியின் திரஸ்காரமும் பிரஹ்மாகாரவிருத்தியின் பிரவாகமுமாகிய நிதித்தியாசனத்தைச் செய்யவேண்டும். இவ்வப்பியாசத்தின் முதிர்ச்சியால் அனுத்மாகார விருத்தி கெட்டு சச்சிதானந்த பிரஹ்ம சொரூபமாக விருத்தி நிலைத்து விடும். இந்நிலையே சமாதி யென்றும் துரியம் என்றும் சொல்லப்படும். இச்சமாதி அவத்தையின்கண் தனது யதார்த்த சச்சிதானந்த பிரஹ்ம சொரூபம் தானே தானுகப் பிரத்தியக்ஷமாம். இந்த பிரத்தியக்ஷமே அபரோக்ஷ பிரஹ்ம ஞானம் என்று சொல்லப்படும்.

எப்படி இரச்சு பிரத்தியக்ஷ ஞானத்திற்குப் பின்னர் இரச்சுவில் கற்பிக்கப்பட்ட சர்ப்பாதி பிராந்த வஸ்துக்கள் மூன்றுகாலத்திலும் இல்லை என்னும் நிச்சயமாகிய அபரோக்ஷ பாதத்தினுல் பயம் நீங்கிவிட்டதோ அதுபோல தனது யதார்த்த பிரஹ்ம ஞானத்துக்குப் பின்னர் தன்னிடத்தில் கற்பிக்கப்பட்ட அனுகூலப் பிரதிகூலவடிவ சேதன அசேதனப் பிரபஞ்சமாய பிராந்த வஸ்துக்கள் மூன்று காலத்திலும் இல்லை என்னும் நிச்சயமாகிய அபரோக்ஷ பாதத்தினுல் சனன மரண சம்சாரம் ஆகிய சகல துக்கங்களும் நீங்கி பரமானந்த மாக நிலைத்தல் ஆகிய பரமகாஷ்டை வடிவ சீவன் முக்தி உண்டாகும். இந்நிலையை சர்வப் பிரத்யத்தனத்தாலும் சம்பாதிப்பதே முமுக்ஷுக்களுக்குக் கர்த்தவ்யமாம்.

---

## ஒன்பதாம் கடிதம்.

### சீவன் முக்தனின் உலக விவகாரங்கள்.

சீவன் முக்த வித்வானுக்கு பிராரப்த அதீனமாய் உண்டாகும் கர்ம விவகாரத்தைப் பற்றி எழுதுவாம்.

1) நான் பிரஹ்ம மென்னும் பிரஹ்ம நிஷ்டரூப சந்நியாச யோகத்தோடு கூடியவனும் (சந்நியாசம் என்பது

நான் எனது என்னும் அபிமான பரித்தியாகம் அல்லது பிரஹ்மான்ம ஐக்கியம்.)

2) அதனுலே ராகத்துவேஷங்கள் இல்லாத பரிசுத்த மனதை உடையவனுயும்,

3) அதனுலே ஜயித்த இருவகை இந்திரியங்களே உடையவனுயும்

4) அதனுலேயே பாகிய வாசனே வடிவ சுபாவத்தை ஜயித்தவனுயும்

5) அதனுலேயே பிரம்மாதி ஸ்தம்ப பரியந்தமான சகல பூதங்களிலும் உள்ள ஆத்மா தன் ஆத்மாவுக்கு வேறல்ல வென்று இவ்வாறு சர்வாத்மத் தன்மையை அறிந்துள்ள வனுயும்

இந்த ஐந்து லக்ஷணங்களோடு கூடிய பிரஹ்ம வித்தா னவன் சரீர ரக்ஷணேயின் பொருட்டு எந்த கர்மத்தைச் செய் தாலும் செய்கிறதில்லே. அதாவது ஞானி பார்க்கும்போது பார்க்கிறதில்லே. கேட்கும்போது கேட்கிறதில்லே. சகல ரசங்களே ருசித்தும் ருசிக்காதவன். துவக்கால் பரிசித்தும் பரிசிக்காதவன். இதுபோல, மற்ற இந்திரியங்களின் வியாபாரங்களே அறிந்து கொள்க.

இதன் அபிப்பிராயம்:- இந்திரியங்கள் தத்தம் விஷயங் களில் பிரவேசிக்கும். அவற்றில் எனக்குப் பற்றுதல் இல்லே. நான் இந்திரியம் அல்லன். இந்திரியம் என்னுடையதும் அன்று. நான் சாக்ஷி சேதனன். இந்திரியம் விஷயங்களே தியாகம் செய்க அல்லது அனுபவிக்க. எனக்கு சிறிதும் சம்பந்தம் இல்லே என்னும் நிச்சய ஞானம் அவன் அடைந் திருக்கிருன். அதனுல் அவன் காரியங்களேச் செய்வதாகக் காணப்பட்டாலும் செய்யாதவன் ஆவன்.

இங்கு இந்திரியங்கள் விஷயத்தை தியாகஞ் செய்க என்றது நிஷித்தமான விஷயத்தை. அனுபவிக்க என்பது விகிதமான விஷயத்தை ஏனென்ருல் நிஷித்த விஷய அனுபவத்திற்கு ஏது திட ராகம்? விகித விஷய அனுபவத் திற்கு ஏது அதிட ராகம்? ராகம் இன்றி போகானுபவம்

கூடாமையால் ஞானியின் சித்தத்தில் அதிடராகம் இருக்கிறது. திடராகம் இல்லை. ஏனெனில் திடராகத்துக்கு ஏது விஷயத்தின் சத்தியத்துவ பிராந்தி. அந்த பிராந்தி ஞானிக்கு இல்லை. ஞானியின் சித்தத்தில் இருக்கும் அதிடராகம் ஸ்வாதீனமாய் இருத்தலாலும், வருத்த விதையைப் போல் துர்ப்பலமாய் இருத்தலாலும் தேக சம்ரக்ஷணைக்குக் காரணமான விகித போகத்திற்கு ஏதுவாம். சாஸ்திரத்தில் விலக்கிய நிஷித்த போகத்திற்கு ஏதுவன்று. ஞானியின் சித்தத்தில் திடராகம் இல்லாததால் ஆபாச சகித சித்தத்தின் முக்கியத் தன்மையால் சொரூப சுகத்தில் ரமிக்கிருன். அமுக்கியத் தன்மையால் அவனது இந்திரியங்கள் விகிதத்தைப் புசித்தலிலும் நிஷித்தத்தைத் தியாகித்தலிலும் செல்லுகின்றன.

மேலே சொன்ன முக்கியத் தன்மை அமுக்கியத் தன்மையின் பொருளை விளக்கமாக எழுதுவாம்.

கோடை காலத்தில் சூரிய வெப்பத்தின் தாபம் பொறுக்க மாட்டாமல் கங்கையில் மூழ்கி தாபம் நீங்கி சீதளமாகிய சுகத்தின்கண் எப்படி அழுந்தியிருக்கிருனே அதுபோல அத்யாத்ம துக்கம், அதிபூத துக்கம். அதிதெய்வ துக்கம் என்னும் தாபத்திரயங்களால் தபிக்கப்பட்ட புருஷன் அத்தாப துக்கம் சகிக்கமாட்டாமல் பிரஹ்மான்ம சொரூபத்தை அடிக்கடி விசாரித்து அகம் பிரஹ்மம் பிரஹ்மாகம் என்னும் விருத்திவடிவ பிரஹ்மசமாதியின்கண் மூழ்கி தாபத்திரய துக்கங்கள் நீங்கி பிரஹ்ம சுகத்தில் சித்தம் அழுந்துதல் சித்தத்தின் முக்கியத் தன்மை.

எஜமானனுல் வேலையின்கண் பிரேரிப்பிக்கப்பட்ட கூலி வாங்குபவனுகிய கூலிக்காரன் பொழுதுபோவதில் நோக்கம் உடையவனுய் வேலையில் நோக்கம் இன்றியவனுய் இருப்பது போல பிராரப்த கர்மாதீனமாக ஈசுவரனுல் விஷய போகங்களின்கண் பிரேரிப்பிக்கப்பட்ட ஞானியானவன் பிராரப்த நாசத்தின்கண் நோக்கம் உடையவனுய் விஷய போகத்தின்கண் நோக்கம் இன்றியவனுய் அப்போகத்தின்கண் சித்தம் அழுந்தாது அனுபவித்தல் சித்தத்தின் அமுக்கியத் தன்மையாம். அல்லது கழையின் பேரில் ஏறி விளையாடும் வித்தையாடியின் சித்தம் உச்சியில் பதிந்திருப்பது போலவும்

ஒருவரோடொருவர் பேசிக்கொண்டு செல்லும் வேலைக்காரி களுக்கு தலைகளிலுள்ள குடங்களில் சித்தம் இருப்பது போலவும் சாமானியமாய் விடயங்களில் பிரவிருத்தித்தல் சித்தத்தின் அமுக்கியத் தன்மையாம். விசேடமாய் சொரூ பத்தில் பொருந்தியிருத்தல் சித்தத்தின் முக்கியத்தன்மையாம் இதற்குப் பிரமாணம்:—

**சோர மனையாட்டி சோர பிரான் மேன் மனமாய்**
**சேரத் தொழிற் செய்யும் திட்டம்போற் பேர் பெரிய**
**அத்தனடி மேன் மனத்தை யாருது வைத்து கந்தே**
**யெத்தொழிலுஞ் செய்வ ரிசைந்து.**

பஞ்சகோச விலக்ஷணமாயும் அவத்தாத்திரய சாக்ஷி யாயும், சுயம்பிரகாசமாயும் அப்பிரமேயமாயும் உள்ள தனது யதார்த்த சொரூபத்தை அபரோக்ஷமாய் அறிந்த ஞானிக்கு இவ்வுலக விவகாரத்தில் கர்த்திருத்வம் கிஞ்சித்தும் உண்டாக மாட்டாது. எப்படியென்றால் வேடர் சங்கத்தால் தன்னை வேடனென்றே மதித்திருந்த பிராமணன் தன்னை பிராமணன் என்று சந்தேகம் அற அறிந்தபின் தன்னை வேடனென்று மதிப்பதுஉண்டோ? இல்லையென்றபடி-அல்லது-சக்கரவர்த்தி நித்திராமயக்கத்தால் தான் உண்மையில் ராஜாவாயிருந்தும் சொப்பனத்தில் தன்னைப் பிச்சைக்காரனாக அறிகிறான். நித்திரா மயக்கம் நீங்கினால் தன்னை சந்தேகம் அற ராஜா வென்று அறிந்தபின் தன்னை பிச்சைக்காரன் என்று மதிப்பது உண்டோ? இல்லையென்றபடி

பசுவின் குளப்படியிலுள்ள நீர் யானைக்கு அற்பமாய் தோன்றுவதைப்போல விசாரத்தால் ராகத்துவேஷங்கள் நீங்கி சாந்த மனதுடைய ஞானியாகிய ஜீவன் முக்தனுக்கு இவ்வுலக வியவகாரங்கள் அற்பமாய் தோன்றும். ஆனால் அதே பசுவின் குளப்படி நீர் கிழக் கொசுவுக்கு சமுத்திரமாக தோன்றுவதுபோல ராகத்துவேஷங்கள் நீங்கப்பெறாத மனது உடையவர்களுக்கு உலக வியவகாரங்கள் மலைபோல் பெரிதாய் தோன்றும்.

இதற்குப் பிரமாணம் வாசிட்டம்

**வெம்புதல்போய்த் தண்ணென்ற வுன்மனதுக் கிவ்வுலகின் வியாபாரங்கள்**
**செம்புகர்வே ழத்தினுக்கான் குளப்படிபோற் ரேன்றுமா லீனநெஞ்சுக்**
**கம்புவியிற் றெழில்சிறிதே யாகினுநீந் திடவரிதா மாவின் பாதப்**
**பைம்புனலுங் கிழக் கொதுக்குக் கெல்லைகரை காணுத பரவையன்றே.**

சுத்த வாசனையில் அழுத்தம் உடையவராய் உலகத்தில் சஞ்சரிக்கும் சீவன் முக்தனை எட்டுத் திக்குப் பாலர்களும் பிரமாண்டத்தை காப்பது போல் காப்பார்கள்.

இதற்குப் பிரமாணம் வாசிட்டம்

**உளத்துற சமத்காரஞ்சே ருண்மையை யுணர்வோர் தம்மை**
**அளக்கரும் பிரமாண்டம்போ லட்டதிக் காளர் காப்பர்**

இறுதியாக, உணவு உட்கொண்ட எச்சில் இலையை யாதொரு கவலையும் அடையாமல் வீதியில் எறிவதைப்போல உலகத்தில் சஞ்சரிக்கும் சீவன் முக்தன் தனது பிராரப்த முடிவில் யாதொரு கவலையின்றி சரீரத்தை விடுவான்.

இதற்குப் பிரமாணம்: பிரபுலிங்க லீலை

ஒண்ட ரைக்கண் ணெடிவி லருளுருக்
கொண்ட டுத்த குருவரு ளாற்றனைக்
கண்ட மெய்த்தவன் காயந்த னையந
முண்ட நெட்டிலை யொப்ப விடுப்பானல்

---

## சிருஷ்டிக் கிரமம்

பிரஹ்ம சைதன்னியத்தில் பின்னசத்தி யென்றும், அபின்னசத்தி யென்றும் இரண்டு சத்திகள் உண்டு. இவற்றில்

அபின்னசத்தியின் சத்துவ குணம் ஆனந்த ரூப சத்தி.

ஷையின் ரஜோ குணம் சித் ரூப சத்தி.

ஷையின் தமோ குணம் சத்ரூப சத்தி.

இந்த மூன்றும் சேர்ந்தது சச்சிதானந்தம்.

பின்னரூப சத்தியின் சத்துவ குணம் மாயை (ஈசுவர னுடைய காரண சரீரம்)

ஷையின் ரஜோ குணம் அவித்தை (சீவனுடைய காரண சரீரம்)

ஷையின் தமோ குணம் 1. விக்ஷேப சத்தி 2. ஆவரண சத்தி.

இந்த விக்ஷேப சத்தியிலிருந்து சூக்ஷும பஞ்ச பூதங் களாகிய ஆகாயம், வாயு, அக்கினி, அப்பு, பிருதிவி உண்டாகின்றன. இந்த சூக்ஷும பஞ்ச பூதங்களின் சத்துவ குணத்திலிருந்து உள்ளம், மனம், புத்தி, சித்தம், அகங்காரம் ஆகிய ஐந்தும் கூடிய அந்தக்கரணமும்; சுரோத்திரம் தொக்கு சக்ஷு, சிங்குவை, கிராணம் ஆகிய ஐந்து ஞானேந்திரியங் களும் உண்டாகின்றன.

இந்த சூக்ஷும பஞ்சபூதங்களின் ரஜோ குணத்திலிருந்து வியானன், பிராணன், அபானன், சமானன், உதானன் ஆகிய ஐந்து வாயுக்களும்; வாக்கு, பாணி, பாதம், பாயுரு, உபஸ்தம் ஆகிய ஐந்துகர்மேந்திரியங்களும் உண்டாகின்றன இந்தப் பிரகாரம் சூக்ஷும பஞ்ச பூதங்களின் சத்துவ ரஜோ குணங்களினின்றும் உண்டாகிற மேலே கண்ட அந்தக் கரணம்-5, ஞானேந்திரியங்கள்-5, வாயுக்கள்-5. கர்மேந் திரியங்கள்-5 ஆக மொத்தம் 20 தத்துவங்களும் சீவனுடைய சூக்ஷும சரீரம் ஆகும்.

மேலும், சூக்ஷும பஞ்ச பூதங்களின் தமோ குணத் திலிருந்து ஒவ்வொரு பூதத்தையும் இரண்டு ஆக்கி, அதில் ஒரு பாதியை நான்காக்கி. ஒரு பூதத்தின் அரை பாகத்துடன் இதர நான்குபூதங்களின் அரைக்கால் பாகங்களைக் கூட்டினல்

பஞ்சீகரணம் ஆகி தூல பூதங்கள் உண்டாகின்றன. அதாவது சூக்ஷ்ம ஆகாசம் அரைபாகம், சூக்ஷ்ம வாயு அரைக்கால் பாகம், சூக்ஷ்ம அக்கினி அரைக்கால்பாகம், சூக்ஷ்ம அப்பு அரைக்கால் பாகம், சூக்ஷ்ம பிருதிவி அரைக்கால் பாகம் கூடி பஞ்சீகரணம் ஆகி தூல ஆகாயம் உண்டாகின்றது. இந்தப் பிரகாரமே மற்ற நான்கு தூல பூதங்களும் உண்டாகின்றன.

இந்த ஐந்து தூல பூதங்களிலிருந்து தோல், ரத்தம், மாமிசம், நரம்பு, எலும்பு, மூளை என்னும் கூறுகள் உண்டாகின்றன. இந்த 6 தத்துவங்களும் சீவனுடைய தூல சரீரம் ஆகும்.

முன்னர் பிரஹ்ம சைதன்னியத்தின் பின்னுசத்தியின் தமோ குணத்தினின்று 1. விக்ஷேப சத்தி, 2. ஆவரண சத்தி உண்டாகின்றன வென்று சொன்னோம். இதுவரை 1. விக்ஷேப சத்தியின் சிருஷ்டியை சொல்லி ஆயிற்று. எஞ்சிய 2-வதாகிய ஆவரண சத்தியே சீவனது அகங்கார கிரந்தி ஆகும். இதனுடைய பலத்தால், சீவனது காரண சரீரமாகிய அவித்தை-1, சூக்ஷ்ம சரீரமாகிய தத்துவங்கள்-20 தூல சரீரமாகிய தத்துவங்கள்-6, அவித்தையில் பிரதிபிம்பித்த சிதாபாசன்-1, இந்த பிரதிபிம்பத்துக்கு அதிஷ்டானம் ஆகிய கூடஸ்தப் பிரஹ்மம்-1 ஆக மொத்தம் 29 தத்துவங்களையும் ஒருமைப்பாடாக பேதம் தெரியாமல் நான் என்று சீவன் அபிமானிக்கிறது.

---

உ

ஸ்ரீ வல்லபை கணபதி துணை

# தியானம்.

தியானப் பழக்கத்தால் நம்முடைய அன்றுட வாழ்க்கையில் உடல் பலமும் மனே பலமும் சாமர்த்தியமும் அதிகரித்து வருகிறதென்றும் மனக் கவலை குறைகிறதென்றும் அவரவர் தொழிலில் திறம்பட செயல்பட முடியுமென்றும் தற்கால விஞ்ஞானிகள் ஆராய்ச்சி செய்து ஒப்புக்கொண்டிருக்கிறுர்கள் அவர்கள் மின்சாரத்தால் இயங்கும் நுண்ணிய கருவிகளால் தியானப் பழக்கமுள்ளவர்களை பரிசோதித்து சுறுசுறுப்புக்குக் காரணமான உடலிலுள்ள நரம்புகளின் கூட்டம் அதிக பலம் பெற்றிருக்கிறதென்றும், உடல்களைப்புக்கும் மனக்கவலைக்கும் காரணமாகிய லாக்டிக் திரவம் (Lactic acid) ரத்தத்தில் மிகவும் குறைந்திருக்கிறதென்றும் கண்டுபிடித்த பிறகுதான் மேலே கண்ட முடிவுக்கு வந்திருக்கிறுர்கள் மேலும் சகல வியாதிகளின் ஆதிக்கமும் தியானப் பழக்கமுள்ளவர்களிடத்து குறைந்திருக்கிற தென்றும் விஞ்ஞானிகள் சொல்லுகிறுர்கள்.

வடநாட்டிலுள்ள மகரிஷி மஹேந்திர யோகி என்பவர் அமெரிக்கா முதலிய தூர தேசங்களுக்குச் சென்று தியானத்தினுல் அடையப்படும் நன்மைகளை பிரசாரம் செய்து அந்த தேசங்களில் உள்ளவர்கள் அநேகம் பேர் இப்பொழுது தியானம் செய்து வருகிறுர்கள். என்னுடைய நாட்டுப் பெருமக்களாகிய நீங்களும் நன்மை அடைய வேண்டும் என்பதற்காக இங்கே உங்களுக்கும் அதைப் பற்றிச் சொல்லுகிறேன்.

காலையில் படுக்கையிலிருந்து எழுந்தவுடன் கொஞ்ச நேரமும் இராத்திரி படுக்கப் போகுமுன் கொஞ்ச நேரமும் தலை கழுத்து உடம்பு நேராய் இருக்கும்படி சௌகரியமாய் உட்கார்ந்து கண்களை மூடிக்கொண்டு தியானம் செய்ய

வேண்டும். இதனுல் அன்ருட தொழில்களுக்கு யாதொரு இடைஞ்சலும் ஏற்படாது. தவருமல் நாள்தோறும் சிறிது நேரம் தியானம் செய்யவேண்டும் என்ற மன உறுதி இருந்தால் போதுமானது.

## தியானம் செய்யும் முறை.

ராமன், கிருஷ்ணன் வெங்கடேஸ்வரன், சிவன், கணபதி, முருகன் முதலிய எந்தத் தெய்வத்தினிடத்தில் அவரவர்களுக்கு விருப்பம் இருக்கிறதோ அந்த தெய்வத்தை அதற்கு ஏற்பட்ட அம்மன் ஆக இரு ரூபங்களேயும் சேர்த்து நினைந்து மனக் கண்ணிஞல் பார்த்துக்கொண்டும் அத் தெய்வத்தின் நாமத்தை தொடர்ந்தாற்போல் மனதுக் குள்ளே உச்சரித்து மனச் செவியினுல் அந்த நாம ஜபத்தை கேட்டுக்கொண்டும் இருக்க வேண்டும்.

ஆரம்ப காலத்தில் மனது தெய்வத்தின் நாம ரூபங்களே விட்டு வெளி விவகாரங்களே நினைத்து அலேபாயும். அப்பொழுது மீண்டும் அந்த தெய்வத்தின் ரூபத்தில் மனதை இழுத்துக்கொண்டுவந்து நிறுத்தி அந்த தெய்வ உருவத்திடம், ''என் மனது உன்னேவிட்டு வெளியே செல்லாமல் இருக்க நீதான் எனக்கு அருள் புரியவேண்டும் — இந்த தியானம் உள்பட நான் செய்கின்ற எல்லா காரியங் களேயும் உன்னுடைய ஊழியனுகவே நான் செய்கிறேன்— இந்த எண்ணம் எப்போதும் இருக்கும்படி நீதான் எனக்கு அருள் புரியவேண்டும்'' என்று சொல்லி இவ்விதமாய் வேண்டிக்கொண்டு தொடர்ந்து தியானம் செய்யவேண்டும் இதில் முக்கியமாய் கவனிக்க வேண்டியது மனதின் கண்ணும் செவியும் தியானத்தில் ஈடுபட்டிருக்க வேண்டும் — இது ஸ்ரீ ரமண மகரிஷிகளின் உபதேசம்.

இப்படி செய்துவந்தால் காலக்கிரமத்தில் மனது ஒருமைப்பட்டு தியானம் பலப்படும்—தியானத்தின் மேல் பதவிகளுக்கு அந்த தெய்வமே நம்மை இழுத்துச்செல்லும்.

தினந்தோறும் விடாமல் செய்யும் இந்த தியானத்தால் மனக் கவலைகள் குறைந்து அன்றாட தொழில்களில் ஊக்கமும் உற்சாகமும் அதிகரிக்கும்—இது என்னுடைய அனுபவம்.

இப்பொழுது என்னுடைய தியானத்தில் உருவத்தோடு கூடிய என்னுடைய தெய்வம் உருவமில்லாத எங்கும் நிறைந்த வஸ்துவாய் மாறுகிறது. இதில் நான் அளவில்லாத சமுத்திரத்தில் ஒரு சிறிய நீர்த்துளி போல் நின்றுகொண்டு ஓங்கார ஒலியில் என்னுடைய மூச்சு மேலும் கீழுமாக மெதுவாக சலித்துக்கொண்டிருப்பதை கவனிக்கிறேன். இதற்கு மேல் நிலையை அவன்தான் எனக்குக் காட்ட வேண்டும்.

தியானத்தில் உங்களுக்கு நம்பிக்கை ஏற்பட்டு பழகி நீங்களும் நன்மை அடைய வேண்டுமென்னும் இச்சையால் என்னுடைய தியான நிலையையும் சொல்லியிருக்கிறேன்.

''ஸ்ரீ குருமூர்த்தியின் உபதேசக் கிரமமும் என்னுடைய அனுபவமும் இதுவே.'' —**ஆத்மானந்த சுவாமிகள்**

**A. சிதம்பரம் பிள்ளை**
ஓய்வுபெற்ற இஞ்சினியர்

35, கீழ புதுபாய்கார தெரு,
உறையூர், திருச்சி-3.
2—2—1974.

---

## பிரஹ்ம ஞான உபதேசம்.

### பிழை திருத்தம்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| ஸ்ரீகுரு தோத்திரம் | 3-வது அடி | தான் | கோன் |
| 7 | 10 | நச்சு சர்ப்பம் | ரச்சு சர்ப்பம் |
| 8 | 15 | அதிஷ்டமான | அதிஷ்டான |
| 10 | 6 | சங்கற்பமதில் | சங்கற்பமறில் |
| 11 | 27 | ''சுயம் | ''அயம் (இந்த |
| 4 | 22 | அங்குசம் | அங்குரம் |
| [illegible] | 14 | ஓவு | மோவு |
| | 6 | தேயத் | தேயுத் |



திருநெல்வேலி மாவட்டம்

விளாத்திகுளம் தாலுகா

## புதூர்

## ஸ்ரீலஸ்ரீ அத்வைதானந்த சுவாமிகள்

## ஆலய கும்பாபிஷேகத்தின்போது

இம்மலர் வெளியிடப்பட்டது.

நாள்: 27--1--75.



இந்நூல் கிடைக்குமிடங்கள்:—

ஸ்ரீ ஆத்மானந்த சுவாமிகள்,
ஸ்ரீலஸ்ரீ அத்வைதானந்த சுவாமிகள்
மடாலயம்,
புதூர் P. O.,
விளாத்திகுளம் தாலுகா
திருநெல்வேலி ஜில்லா.

ராவ்சாகிப் A. சிதம்பரம் பிள்ளை,
ஓய்வுபெற்ற இஞ்சினியர்,
35, புது பாய்கார தெரு,
உறையூர், திருச்சி-3.

சுந்தர் அச்சகம், (கோமதி டாக்கீஸ் எதிரில்) அருப்புக்கோட்டை